(6) தருமத்திற் சிறந்தது சுஜாதிதருமமாம்—அதாவது, நமது சுஜாதியாரில் ஏழைகளாக இருப்பவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்யவேண்டியதன்றியில்; அவர்களுடைய மக்களுக்கு கல்வி, கைத்தொழில்களை கற்பித்துவைத்தும், அது விஷயமாக அந்தந்தகிராமம், கஸ்பா நகரங்களிலும், கூடுமாகில் மதுரை, மதராசு முதலான பட்டணங்களிலும், பிரதிஷ்டு சுஜாதிமஹாசபைகளைக்கூட்டி, அந்தசசபைகளில் சுஜாதியாருடைய விருத்தி விஷயத்தைப் பற்றி பேசி, நாயடுஹோம் (Naidu Home) கவரவர் தலவாசம் என்றுதி தர்மஸ்தாபனங்களை ஸ்தாபித்து அவைகளுக்கு வேண்டிய திரவிய சகாயம் செய்வித்தும், அந்ததிரவியத்தைக்கூட்டி பெருக்கி விருத்தியாக்கி, அதனால் வரும் லாபத்தினால் நம்மவர்மக்களுக்கு தர்ம கல்வியையும், கைத்தொழிலறிவையும் ஊட்டி விருத்தியாக்கி வரவேண்டும். இப்படி விருத்தியாசக் பெற்றவர்களுடைய சுகவாழ்வைக் கருதியும், அவர்களுடைய சந்ததிகளுடைய விருத்தியைக்கருதியும், பிரதிஷ்டு தாம்வாழும்பிரதிஷ்லில்லாக்கவிலும் மாகாணசபைகளைக்கூட்டி பேசி சுகாதிவிருத்தியை பிரபலமாக்கவேண்டும்.

(7) இப்போது நம்மவர்களிற் சிலர் நான் பெரியஜாதி, நல்லவமிசத்தான் என்று சொல்லிக்கொள்ளும் கக்ஷி பிரதிகக்ஷிகளையும் உண்டாக்கி ஒருமைப்பாட்டின் பெருமையை அறியாமல் தவிக்கிறார்கள். அதனால் நமது ஜாதியார்க்கு வந்த கஷ்டநிஷ்டூரங்கள் கொஞ்சமல்ல. இனிமேலாகிலும் நம்ம ஜாதியார் யாவரும் ஒரே குடும்பத்திற்பிறந்த ஒரே சகோதிரர்களாக எண்ணித் தழுவி ஒருமைப்பாட்டை விருத்தியாக்கவேண்டும்.

(8) நம்மவருக்குள் குடிவெறியும், கூத்திவைப்பும், வரவர அதிகரித்து வருவதாக வதந்தி. குடித்தல் பஞ்சமஹா பாதங்களில் ஒன்று, கூத்திகளை வைத்தல் தருமசாஸ்திர விரோதம், ஆகவே, குடி—கூத்திக் கள்ளாடதனங்களை கட்டோடீட விட்டொழித்தும், பரமாரிசோதார்களாக பிரகாசிக்க வேண்டும். புலையும், கொலையும, களவும் தவிர்ததவர்கள் புனித ரவார்க ளன்றோ ?

(9) பொய், சூது, வாது முதலானதுகளை விட்டொழித்து பெற்றோர், பெரியோர், பிராம்மணர் பகதி விசுவாசமுளளவர்களாகி; சான்றோர், சாதுக்கள் சர்சஙகததிற் சேர்ந்து சதாசாந்தம், சத்தியம், சுவாமிபக்தியைத் தழுவ வேண்டும்

(10) பிரதிதினமும் அருணோதயத்தில் எழுந்து ஆண் பெண் சகிதமாக சுத்த ஸ்நானஞ்செய்தும், வீடுவாசல் பண்டபாத்திரஙகளை சுத்திசெய்தும், ஜகதீசுவரனை தியானித்தும், தமக்கு கிடைத்திருக்கும் போஜனத்தை உண்டும், தம் தம் காரியஙகளை கிரமேணசெய்து முடித்தும், அவகாசகாலத்தில் ஆரியர் வேதம், ஆரியர்ஆசாரம், பகவத்கீதையாதி கிரந்தஙகளைப்படித்துத்தெரிந்து சதாபிரம்மதியானபாராயணர்களாகி, இல்லறதருமத்தைஇன்பமாகநடத்தி சுவர குடும்பத்தாராக பிரகாசிக்கவேண்டும் ஓசுஜாதிசகோதிரர்களே ! இந்தப் பத்து பிரமாணங்களை ஒடுங்கிய மனதோடன்றி, சுபுத்தியால்படித்துஆழ்ந்து யோசித்து அவைகளின்படி நடந்தும், நடத்தியும் வந்தால், நம்மவர் நற்கதியை அடைவார்கள்என்பது திண்ணம். ஓ! சுஜாதிசகோதிரர்களே உஙகளுக்கு சுபவாழ்வும் மஙகளமு முண்டாவதாக—ஓம் தத் சத்.

இப்படிக்கு சுஜாதி ஊழியன்,

**சேலம், பகடால, நரசிம்மலுநாயடு.**

கோயமுத்தூர் கலாநிதி பத்திராசிரியன்.